ओम् तत् सत् पर ब्रह्मणे नमः

मन्त्रोपदेशः

॥ श्रीः ॥

श्री काशिकानन्द ज्ञानाचार्येण विरचितम् ॥

# மந்த்ரோபதேசம்.

இது

சகல சாஸ்திர கர்த்தரும்

திருப் பூவனூர், வேதாந்த மடம்,

ஸ்ரீ லஸ்ரீ

**காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகளவர்கள்**

*இயற்றியது.*

வட ஆற்காடு ஜில்லா, குடியாத்தம்,
வேதாந்தத் தமிழ் வாசக சாலை,
உரிமையாளரும், செயலாளரும் ஆகிய
உயர் திரு

**பு. கா. கங்காதர முதலியாரவர்கள்**

*விருப்பத்தைப் பொருந்தியது.*

மதுரை, ராஜேஸ்வரி பிரசில்
அச்சிடப்பட்டது.

ஓம்.

अहं ब्रह्मास्मि

अयं आत्मा ब्रह्म

प्रज्ञानं ब्रह्म

तत्वमसि

இதில் உள்ளன:

1. பஞ்சாக்ஷர மந்திரம்.
2. ஷடாக்ஷர மந்திரம்.
3. அஷ்டாக்ஷர மந்திரம்.
4. மந்திர விமர்சனம்.
5. ஓம் மந்திரம்.
6. தேவி மந்திரம்.

# மதிப் புரை.

## திரு. நீ. ஷண்முகாநந்த ஐயா,

## ஸ்ரீ பிரஹ்மாநந்த சுவாமிகள் மடம், மதுரை.

### அறு சீர் விருத்தம்.

*முத்திதரும் அருள்ஞாந வித்தையினை முறை
மையினிற் றெரித்த நூல்கள், இத்தரையிற் பல
வடநூல் இயன்றமிழில் பெயர்த்தருளி எழிலார்
ஞாந, வித்தகனாய்ப் பூவணத்தை விழைந்தருளி
மிளிர்பனுவல் இசைத்த மேலோன், சத்தியநற்
காசிகா நந்தசிவ குருபரனாய்ச் சார்ந்தோன்
மாதோ.*

*ஒன்றியநல் ஓரெழுத்தாய் உயர்ச்சிமிகும்
ஐந்தெழுத்தாய் உலையா இன்பம், நின்றுதரும்
ஆறெழுத்தாய் நிலவியநல் லெட்டெழுத்தாய்
நேரே ஞாநந், துன்றியநன் மந்திரமுந் துங்கமத
கயமுகத்தோன் துரிசில் தேவி, மன்றிருநன்
மந்திரமும் வடமொழியில் வழங்குமுறை வழுக்
கா தாய்ந்தே.*

வேதமுதல் ஆகமங்கள் விளக்கும்அருள் மந்திரங்கள் வெவ்வேருகிக், காதலொடு கணிப்பவர் தங் கருமவினைக் கட்டறுத்துக் கதியே நல்கும், ஆதலினுல் அவற்றியல்பை யடைவுறநல் மந்திரோப தேசம் என்றே, ஏதமிலா தெடுத்திசைத் தான் இவ்வுலகில் அவன்கருணை இயம்பற்பாற்ரே.

---

உ

## முக வுரை.

---

நிலை யியற் பொருளுக்கும், இயங் கியற் பொருளுக்கும், அவசியம் வேண்டப்படுவன மந்திரங்களாம். மந்திரத்தினை முதலில் கூறியே, பின்னர் செடி கொடி முதலியவற்றைப் பறிக்கவோ, யாகாதி கிருத்தியங்களைச் செய்யவோ, உணவாதிகளைக் கொள்ளவோ, பலி யிடுதல் முதலியன செய்யவோ, மாரண உச்சாடணுதிகள் செய்யவோ, வேண்டும் என்று நூல்கள் கூறுகின்றன. அவ் வாருய மந்திரங்கள் எண் இறந்தன வாம்.

அங்ஙனம் இருப்பினும், மனிதர்கள் துன்பம் போக்கற்கும், இன்பம் அடைதற்கும் காரணமாக உள்ள மந்திரங்களை மட்டும், சுருக்க மாக வரைந்து, அதற்கு மந்திரோபதேசம் எனப் பெயர் வைத்து வெளியிடுகின்றோம். மந்திர விசேஷ நமும் செய்திருக்கின்றோம். மந்திரம் ஒழுங்காக உச்சரிக்கும் முறை, தவறாக உச்சரிக்கும் முறை முதலியவற்றையும் வரைந்திருக்கின்றோம். மந்திரத்தினை அநுஷ்டிக்கும் முறை முதலியவற்றைத் தெளிந்த ஆசானிடம் உபதேச வாயிலாகக் கேட்டு உணரவேண்டும்.

தானாகவே குரு உபதேசம் இன்றிப் புத்தகத்தைப் பார்த்து நிச்சயிப்பது, ஐயம் திரி வுடையதாய், "குருவிலான் கொண்ட ஞானம் குமரியைக் குமரி கூடி, மருவிய இன்பம் ஒக்கும் மண்ணிடை நம்போல் வந்த, குருவினாற் பெற்ற ஞானம் குமரியைக் குமரன் கூடி, மருவிய இன்பம் ஒக்கும் என்பர்நன் மதியுளாரே." என்று சிவஞான வள்ளலார் கூறியது போன்று, நற் பலனை அடைவதற்கு ஏது வாகாமல் கஷ்டப்பட்டது மாத்திர மாக முடியும்.

இதனை உணர்ந்து, வட ஆற்காடு ஜில்லா, குடியாத்தம் வேதாந்தத் தமிழ் வாசக சாலையை நிறுவியவரும், ஏழையா யிருந்து பிரபு ஆன வரும், சீவ ஞக இருந்து சிவன் ஆனவரும், பிறருக்குக் கல்வி அறிவு முதலிய பல பொது அறங்கள் இயற்றியவரும், நல் ஒழுக்கம், நற் செய்கை உடையோரு மாகிய, ஸ்ரீமாந் பு. கா. கங்காதர முதலியார் அவர்கள் இவ் வாறுய ஒரு நூலை இயற்றி வெளியிடவேண்டும் என்று கேட்டு கொண்டார்கள். அவர்க ளுடைய ஊக்குவிக்குந் தன்மை அதிக மாக இருந்தும், விரைவில் எழுத முடியாது இடையூறு பல தடை யாக வந்து முயற்சி குன்றியிருந்து, இப் போது கங்காதர இறைவன் திரு வருளால் இச் சிறிய நூல் முற்றுப் பெற்று வெளிவருகின்றது.

இதனை. பொது நலத் தொண்டு புரியும், திரு வாளர் பு. கா. கங்காதர முதலியார் அவர் களின் ஞாபகம் படிப்போர் யாவருக்கும் மநதில் பதியும் வண்ணம் அவர்களின் நினைவுச் சின்ன மாக வெளியிடுகின்ரும்.

விருப் புடையார் யாவரும் வாங்கிப் பார்த்து உண்மை உணர்ந்து, இன்புறு மாறு விரும்புகின்றனம்.

**காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்,**
வேதாந்த மடம், திருப் பூ வணம்.
*இராம நாத புரம் ஜில்லா.*

உ சிவ மயம்.
ஓம் மகா கணபதயே நம:
ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகாய நம:

## மந்திரோபதேசம். — मन्त्रोपदेशः ॥

திருவளர் வீர சேகர விறைவன் திருவடிகளைத் திரம் பணிந்து, திருவருள் பெறநற் சாதக மாகச் செப்புநல் வேதத்தின் நடுவில், திருவருள் துணையாக் கூறுமந் திரங்கள் சிந்தையிற் றெள்ளிதின் விளங்கத், திருவருள் பெறுமந் திரோபதே சத்தைச் செப்புவன் யாவரு மகிழ.

---

மந்திரங்கள் - ஓம் - பஞ்சாக்ஷரம் - ஷடாக்ஷரம் - அஷ்டாக்ஷரம் - கணேச மந்திரம் - தேவீ மந்திரம் - கிருஷ்ண - ராம மந்திரம் என்பன ஆம்.

# மந்திர விவேசநம்.

உலக மாந்தர்கள் நன்மை யடைதற்குப் பல சாதநங்கள் சாஸ்திரங்களில் விதிக்கப்பட் டுள் ளன. அவற்றுள், மந்திரங்களும் ஒன்றும். வேதத் தில், மந்திர பாகம், பிராஹ்மண பாகம் என்று இரண்டு பிரிவு இருக்கின்றன. முன்னர் பொருளை அறிந்து கொள்வது, பிராஹ்மண மாம். அநுஷ் டாந காலத்தில் ஜபிப்பது மந்திர மாம். அதே போன்று, இறைவனைப் பற்றுதற்கு, இறைவன் நாமங்களை நாத் தழும் பேற இடைவிடாது, 108-1008 - 10008 - 100000 முறை செபிக்கச் சொல்லி விதித்திருக்கிறது. ஜபிப்பதன் அவாந் தர பலன், அஷ்ட மகா சித்தி முதலியனவும், முக்கிய பலன் பரம்பரை யாக அநர்த்த நிவிர்த்தி, ஆநந்தப் பிராப்தி யாகிய பெரும் பேறும் நூல் களில் கூறப்படுகின்றன.

மூர்த்திகள் நாநா வாக இருக்கின்றமையின், அவற்றின் சொரூப மான மந்திரங்களும் அநேக வித மாக இருக்கின்றன. ஆயினும், நேர் வழி, வளைவு (கோணல்) வழி, யாவும் விரும்பிய ஊர்

அடைவதற்கு எங்ஙனம் சாதநமோ, நேராகச் செல்லும் நதிகளும், வளைவா(கோணலா)கச் செல்லும் நதிகளும், ஒரே சமுத்திரத்தில் போய்ச் சேருவதற்கு எங்ஙனம் சாதநமோ, அதே போல், நாநா வித வேறுபாடு உடைய மூர்த்திகளும், அவற்றின் மந்திரங்களும், ஒரே பரமாத்மாவை, வளைந்து அடைவதற்கோ, நேரே அடைவதற்கோ, சாதநங்களே யாகும். இந்தக் கலி யுகத்தில், நாம உச்சாரணம், நாம ஜபம் முதலியன விரைவில் சித்த விக்ஷேபங்களைப் போக்கி, மநதை ஒரு முகப்படுத்தி விரைவில் பலனைக் கொடுக்கின்றன.

நாமத்தினைச் செபிப்பதில், மந்திர வேத்தாக்கள் கணக்கிட்டிருக்கின்றனர். ஆயுர் வேதிகள், மருந்தின் குணங்களை அறிந்து, வியாதிக்குத் தக்க மருந்து அளவு, காலம், இடம், வர்த்தமான முதலியன கூறியிருக்கின்றனர், அதன்படி பத்திய பாக மாக, அளவோடு நடந்து, முறைப்படி, மருந் துண்போருக்கு, வியாதி நிவிர்த்தியும், தேக ஆரோக்கியமும், உண்டாகிச் சுகத்தினை அடைகின்றனர். அது போல, அக்ஷரங்

(எழுத்துக்) கட்கு மாத்திரை கணக்கிட்டிருக்கின்றனர். மந்திரங்களிலும், செய்யுள்களிலும், உள்ள, உயிர் எழுத்துக்கும், உயிர் மெய்யில் உள்ள, உயிர் எழுத்துக்கும், மாத்திரம் எழுத்துக் கணக்கிடப்படுகின்றதே அன்றித், தனி மெய் எழுத்துக் காவது உயிர் மெய் எழுத்தில் உள்ள மெய் எழுத்துக் காவது கணக்கிடுவது இல்லை. மாத்திரையை நீட்டலினாலும், குறுக்கலினாலும், பிரத்தியபாய ரூப பாபம் வரும். சாதாரண அறிவினர், இதனை உணராது, தம் மநம் போன வாறு எல்லாம் ஜபிக்கின்றனர். அப்படிச் செய்வதால், மந்திர ஜெப பலன் போய்விடுகிறது. வைத்தியர் சொன்ன அளவுப்படி மருந்தை உட்கொள்ளாமல், அதிக மாகவோ, குறை வாகவோ, உட்கொண்டால், வியாதி நீங்காமையோடு நில்லாமல், வேறு விதக் கெடுதலையும் செய்து தூல உடலுக்கே அழிவு வந்து விடுகிறது கண்கூடாகக் கண்ட விஷயம். அதே போல், மந்திரங்களின் அக்ஷர அளவுப் படி மாத்திரையை உச்சரிக்காமல் கூட்டியும், குறைத்தும், உச்சரித்தால், மந்திரங்கட்கு உள்ள பலன் சித்தியாமையோடு, விபரீத மாக, நரகப் பிராப்தி முதலிய அதிர்ஷ்ட பலனும்,

வாய் - கண் - காது - கை - கால் - வயிறு முத லிய அவயவங்கட்கு இயற்கை விரோதம் உண் டாகி, வேலைகளைச் செய்யாமல், கோணல் வீங்கல் முதலிய துன்ப ரூப திருஷ்டப் பிரயோகமும் உண்டாகும். அதனால், பய பக்தியோடு மந்திர வேத்தா நியமித்த பிரகாரம் மாத்திரைகளை உச்சரித்து எளிதில் பலனை அடைய வேண்டும்.

சிலர், சம்ஸ்கிருத (வட) மொழி மந்திரம் என் றும், தென் மொழி மந்திரம் என்றும் இரு பிரிவு கூறுகின்றனர். ஓம் நம: சிவாய - ஓம் சிவாய நம: என்னும் பஞ்சாக்ஷரமும், ஓம் சரவண பவ என் னும் ஷடாக்ஷரமும், ஓம் நமோ நாராயணாய என்னும் அஷ்டாக்ஷரமும், ஓம் என்னும் பிரணவ மும், ஓம் கணேசாய நம: என்னும் கணேச மந்திரமும் இவை போன்றன பிறவும் வட மொழி மந்திரம் என்றும், ஓம் சிவய நம:, நம: சிவய என்பது. சிவய வசி (இரு தலை மணி) என்பது. ஓம் வாசுதேவாய நம: என்பது ஓம் முருகா வணக்கம் என்பது போன்றன. தென் மொழி(பஞ்சாக்ஷரம்) ஐந் தெழுத்து,(ஷடாக்ஷரம்) ஆறெழுத்து, (அஷ்டாக்ஷரம்) எட் டெழுத்து,

மந்திரங்கள் என்றும், ரிக் யஜுஸ் சாம அதர்வண வேதம், வட மொழி வேதம் என்றும், தென் மொழியில் நால்வேதம் முன் இருந்தன என்றும், தேவார திரு வாசகங்களைத் தென் மொழி வேதம் என்று சில வகுப்பாரும், வட மொழி ஆறு அங்கம் வேறு என்றும், தென் மொழி ஆறு அங்கம் வேறு என்றும், வட மொழி ஸ்மிருதி வேறு என்றும், தென் மொழி ஸ்மிருதி வேறு என்றும், வட மொழிப் புராணம் 18, உப புராணம் 18, உப புராண உப புராணம் 18, வேறு என்றும், தென் மொழிப் புராணம் வேறு என்றும், வட மொழி ஆயுர் வேதம் வேறு என்றும், தென் மொழி ஆயுர் வேதம் வேறு என்றும், வட மொழிக் கடவுள் வேறு என்றும், தென் மொழிக் கடவுள் வேறு என்றும், வட நாட்டுத் தெய்வம், கணேசர் - கண்ணன் - சிவன் - பிரஹ்மா முதலியன என்றும், தென் ஞட்டுத் தெய்வம் - முருகன் - வள்ளி - தெய்வயானை - சொக்கலிங்கம் (தென் ஞடுடைய சிவன்) தண்ட பாணி - (கம்புக் கையர்) முதலியன என்றும், பேத கற்பனை செய்து, பாஷையிலும், தெய்வத்திலும், த்வேஷ முடைய சிலர் கலாம்

விளைவிக்கின்றதே தொழி லாகக் கொண்டு, சாதாரண சநங்களை ஏமாற்றிச் சீவிதத்தைக் கழிக்கின்றனர்.

எல்லா வியவகாரங்களும், எல்லா மந்திரங் களும், சம்ஸ்கிருத பாஷையில் முதன் முதலில் ஏற்பட்டிருந்ததாகத் தெரிகின்றது. பின்னர் பல பாஷைகளை உண்டுபண்ணினர்கள். அதில் பெரி யார் பலர் பல நூல்களைச் செய்திருக்கின்றனர்.

எல்லை உணர முடியாத கால மாகச் சம்ஸ் கிருத பஞ்சாக்ஷர - அஷ்டாக்ஷர - ஷடாக்ஷர - பிரணவம் முதலியன அநுஷ்டிக்கப்பட்டு வந்தி ருக்கின்றன என்று தெரிகிறது. அநுஷ்டித்த பலர் பலனையும் அவ் வாறே அடைந்திருக் கின்றனர் என்றும் புராண இதிகாசக் கதைகள் வாயி லாக ஐயம் திரிவு இன்றி உணர்கின்றேம்.

முன்னோர் சென்ற வழியே நாமும் சென்றால், "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர் மொழியும், பொன்னே போல் போற்றுவமென் பதற்கும்" என்னும் சூத்திரப்படி, ஐயந் திரிவு இன்றி, மந வாக்குக் காய ஒருமைப்பாட்டின்

கிடத்தால், எண்ணிய எண்ணியாங் கெய்தி, இடையூற்றைக் கடந்து, என்றும் நிலைத்த இன்பத்தினைப் பெறுவோம்.

அநுபவம் இலார் சிலர் கூறும் புது வழியில் செல்வோ மாயின், மந வாக்குக் காய வேறு பாட்டால், ஐயம் திரிவு அடைந்து, பலன் கைவரப் பெறாது போகும்.

இன்னும், வட மொழிப் பஞ்சாக்ஷரம் - ஷடாக்ஷரம் - அஷ்டாக்ஷரம் - பிரணவம் முதலியவற்றையே இறுகப் பற்றிக் கொண்டு, தென் மொழிப் பஞ்சாக்ஷரம் - ஷடாக்ஷரம் - அஷ்டாக்ஷரம் - பிரணவம் என்று கூறுவது வியப்பாக இருக்கிறது.

அது எது போலும் எனின், முன் இராமாநுஜர் முதலிய பெரியோர்கள், பிற மதத் துவேஷத்தாலும், பிற மதப் பொருளைத் தம் உபாசநா மூர்த்திக்கு உடைமையாக்கும் பொருள் ஆசையாலும், திருப் பதி வேங்கட சுப்புவை - பெருமா ளாக மாற்றினர். அதாவது, மூல விக்கிரகம், மயில் வாகநத்தோடு சுப்பிரமணியத்

கடவுள் நிற்கிறார் என்று சொல்லும்படியாக இன்றும் பிரத்தியக்ஷ மாக விளங்குகின்றது. இரவில் அர்த்த யாமத்தில் வில்வ தளம் சாத்துகிறார்கள். அழகர் கோவிலில் மலையில் உள்ள விஷ்ணுவுக்கு வில்வ தளம் சாத்துகிறார்கள். அவ் வாறே, விஷ்ணு ஸ்தல மாகிய திருப் போரூரில் வைசவர்கள் ஆதிக்கியமா யிருந்த காலத்தில் சுப்பிரமணிய ஸ்தல மாக ஆக்கியிருக்கின்றார்கள். அதாவது, ஆலயம் பிரணவ ஆகாரம், நின்ற விக்கிரகம். அதற்கு நித்திய அபிஷேகம் இல்லை. துளசி தீர்த்தம் கொடுத்தல், சடகோபம் சாதித்தல். வைஷ்ணவப் பரிசாரகர். சண்டிகேசுவரர் ஸ்தானத்தில் ஒரு சிலா விக்கிரம். வேறு விக்கிரகங்களே இல்லை. இவ் வாறு எல்லாம் பொருளாசையினால், விக்கிரகங்களை அத்தியந்தம் எடுத்துவிட்டுப், புதிய விஷ்ணு சிலா விக்கிரகத்தையோ, சுப்பிரமணியர் சிலா விக்கிரகத்தையோ வைக்காமல், பழைய விக்கிரகங்களையே வைத்துக் கொண்டு,அலங்காராதிகளைத் தங்கள் கொள்கைப் படி செய்துகொண்டு, எங்ஙனம் புதிய பெயர் கூறுகின்றனரோ, அது போன்றே, பஞ்சாக்ஷரம் ஷடாக்ஷரம் அஷ்டாக்ஷரம் பிரணவம் முதலிய

மந்திரங்களை மாற்ற மன மிலார் வட மொழி எழுத்து மந்திரங்களையே வைத்துக்கொண்டு, பாஷையும், இலக்ஷணமும், வேற்றுமை யுருபும், உணரா ராய்த், தமிழ்ப் பஞ்சாக்ஷரம் - தமிழ் ஷடாக்ஷரம் - தமிழ் அஷ்டாக்ஷரம் - தமிழ் பிரண வம் - என்று கூறுவது வியப்பினும் வியப்பாக இருக்கின்றது.

சம்ஸ் கிருத பாஷைக் குள்ள பாணினி வியா கரணம் - சிவ - நாராயண - சரவண பவ - என் னும் மந்திரச் சொற்களின் பின் பெயர்ச் சொல் வேற்றுமை "ஙே ய:" என்னும் சூத்திரப்படி நாலாம் வேற்றுமை ஒருமை உருபு "ஙி" யின் ஸ்தாநத்தில், ய காம் வரும் என்று விதிக்கிறபடி, யகாம் வந்து அகாம் ஆகார மாக நீண்டு, சிவாய - சரவண பவாய - நாராயணாய என்று ஆகிறது. இவ் வாறு தமிழ் தொல்காப்பியம் - நன் னூல் - வீர சோழியம் - நேமி நாதம், இலக்கண விளக் கம் முதலிய இலக்கணம் விதிக்கும் நூல்கள், தமிழ்ப் பெயர்ச் சொல்லின் பின் நான் காம் வேற்றுமை உருபு "கு" வரும் என்று விதிக்

கின்றனவே அன்றி, யகாரம் வரும் என்று விதிக்கவே இல்லை.

ஓம் என்னும் பிரணவ மந்திரம் ஸம்ஸ்கிருத பாஷைக்கே உரியதாகும். அது அகாரம் உகாரம் மகாரம் என்னும் மூன்று எழுத்துக்கள் சேர்ந்ததாகும். அகாரமும், உகாரமும், சேர்ந்தால், குண சந்தியால், ஓ காரம் ஆகின்றது என்று பாணினி வியாகரணம் விதிக்கின்றது. தமிழில் உள்ள தொல்காப்பியம் - நன்னூல் - வீரசோழியம் - நேமிநாதம் - இலக்கண விளக்கம் முதலிய இலக்கணம் விதிக்கும் நூல்கள், அகாரத்தின் முன்னர் உகர உயிர் எழுத்து வந்தால் "வ" கரமோ, "ய" கரமோ உடன்படு மெய் ஒன்று தோன்றி, "அவ்வு" என்று ஆகும் என்று விதிக்கின்றனவே அன்றி, ஓகாரம் ஆகும் என்று விதிக்கவில்லை. தமிழில், அவயவப் பகுப்பும் இல்லை, அவயவ ஆற்றலும் இல்லை. அகாரம் வாசு தேவனை உணர்த்தும், உகாரம் உமா மகேசுவரியை உணர்த்தும் என்று வட மொழி நிகண்டு கூறும் தன்மை, தென் மொழி அகாரத்துக்கோ, உகாரத்துக்கோ இல்லை.

பழமை யாசையினாலோ, பொருள் ஆசையினாலோ, வட மொழிச் சம்ஸ்கிருதப் பதங்களை உடைய பஞ்சாக்ஷரம் - ஷடாக்ஷரம் - அஷ்டாக்ஷரம் - பிரணவம் முதலிய மந்திரங்களையே வைத்துக் கொண்டு, பொருளை மாத்திரம் தமிழ் என்று சொல்லி[illegible]திக்கின்றனர்.

தமிழில் பஞ்சாக்ஷரம் - ஷடாக்ஷரம் - அஷ்டாக்ஷரம் - பிரணவம் முதலியன வேண்டும் என்று விருப்பம் உடையார் புதிய மந்திரங்களை உண்டு பண்ணவேண்டும்.

சரவண பவ என்னும் ஷடாக்ஷரத்தைப் பொருள் விளங்காது, சரஹண பவ என்று புத்தகங்களில் அச்சிட்டும், பலருக்கு உபதேசம் செய்தும், ஒரு சாரார் தவறான பாதையைப் பெரிதாக்கிப் பொருள் சம்பாதிக்கின்றனர்.

பசும் பாலைத் தோற் பாத்திரத்தில் வைத்தால், எப்படிப் பாலுக் குள்ள சுத்த மான தன்மை நீங்கித், தோல் சம்பந்த மாத்திரத்தினால் அசுத்தத் தன்மை வருகிறதோ, புநித மான வேதத்தில்

கூறிய அஹிம்ஸையைப் பிற மத மாகிய ஜைந பௌத்த மத நூல்களில் வைத்தலால், மத சம்பந்த மாத்திரத்தினுல் அஹிம்ஸை என்னும் சொல் எங்ஙனம் அசுத்தம் ஆகின்றதோ, அங்ஙனமே, வட மொழி (சம்ஸ்கிருத) பஞ்சாக்ஷர - ஷடாக்ஷர - அஷ்டாக்ஷர - பிரணவங்கள், தமிழ் மொழியில் கலந்ததால், வட மொழி மந்திரத்துக் குள்ள சுத்தத் தன்மை கெட்டு, பதச் சிதைவு - உச்சரிப்புத் தவறு முதலியவற்ருல் உண்டாம் அசுத்தத் தன்மை வந்து பொருந்துகின்றன என்று உணர வேண்டும்.

ஒரு பாஷையோடு ஒரு பாஷை கலவாமல் தனித் தனி யாக இருப்பதும் நல்லதே.

ஆயினும் சிற் றுண்டி உணவுக் கலப்பில் (மிக்சரில்) அதிகச் சுவை இருக்கின்றது போன்று, பாஷைக் கலப்பில் சுவை மிகுந்திருக்கின்றது என்று சிலர் கூறுகின்றனர்.

# மதுரை மீநாக்ஷி அம்மை பிள்ளைத் தமிழ்.

## காப்புப் பருவம் 5-வது பாடல்

## முருகக் கடவுள் வணக்கம்.

பமரம டுப்பக்க டாமெடுத் தூற்றுமோர் பகடுந டத்திப்பு லோமசைச் சூற்புயல் - பருகியி டக் கற்ப காடவிப் பாற்பொலி பரவைவயி டைப் பத்ம மாதெனத் தோற்றிய, குமரியி ருக்கக்க லாமயிற் கூத்தயர் குளிர்புன மொய்த்திட்ட சாரலிற் போய்ச்சிறு - குறவர்ம கட்குச்ச லாமிடற் கேக்கறு குமரனை முத்துக்கு மரனைப் போற்று தும், இமிழ்திரை முற்றத்து மேருமத் தார்த்து முன் ளெயிறுகு நச்சுப்ப ணைடவித் தாப்பிசைத் - திறுகவி றுக்கித்து ளாய்முடித் தீர்த்தனே டெவரும தித்துப்ப ராபவத் தீச்சுட, அமுதுசெய் வித்திட்ட போனகத் தாற்சுட ரடருமி ருட்டுக்கி ரீவமட் டாக்கிய - அழகிய சொக்கற்கு மால் செயத் தோட்டிக லமர்செய்க யற்கட்கு மாரி யைக் காக்கவே. என்றும்

## கந்தர் அலங்காரம் 37 வது பாடல்.

*கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக்க லவிக்கள்ளை, மொண்டுண் டயர்கினும் வேள்மற வேன்முது கூளித்திரள், டுண்டுண் டுடுடுடு டேடே டுடுடுடு டுண்டுடுண்டு, டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ் சூர்க்கொன்ற ராவுத்தனே.*

## மேற்படி 50 வது பாடல்.

*படிக்குந்தி ருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினாற், பிடிக்கும்பொ ழுதுவந் தஞ்ச லென் பாய்பெரும் பாம்பினின்று, நடிக்கும்பி ரான்மரு காகொடுஞ் சூரன டுங்கவெற்பை, இடிக்குங்க லாபத்த னிமயி லேறுமி ராவுத்தனே.*

என்றும், அள விறந்த செய்யுட்களில் சலாம் ராவுத்தன் என்ற உருது பாஷைச் சொல் வந்து கலந்து சுவை தருகின்றது என்றும்,

## மாணிக்க வாசக ஸ்வாமிகள் திரு வாசகம் - அருள் பத்து.

*சோதியே சுடரே சூழொளி விளக்கே சுரி குழற் பணைமுலை மடந்தை, பாதியே பரனே பால்*

கொன்வெண் ணீற்றாய் பங்கயத் தயனுமா லறியா, நீதியே செல்வத் திருப்பெருந் துறையில் நிறைமலர்க் குருந்தமே வியசீர், ஆதியே யடியேன் ஆதரித் தழைத்தால் அதெந்துவே என்றரு ளாயே.

என்று ஒன்பது செய்யுட்களில் அதெந்து என்று தெலுங்குச் சொல் வந்து கலந்து சுவை தருகின்றது என்றும்,

இவை போன்று, திருப் புகழ் - தாயு மான சுவாமிகள் பாடல் முதலியவற்றிலும், வட மொழி யொழிந்த வேறு பாஷைச் சொற்கள் பல வந்து கலந்து சுவை தருகின்றன என்றும் கூறுகின்றனர். இவ் வாறு இருக்க, உருது தெலுங்கு கன்னடம் முதலிய சொற்கள் கலந்த தில் துவேஷம் இன்றித், தொல் காப்பியம் முதலிய நூற்கள் பலவற்றிலும் பல வட மொழிச் சொற்கள் கலந்திருப்பதை உணராமல், மந்திரத்தில் மாத்திரம், தென் மொழியில் மந்திரம் இன்மையை நினைவிற்குக் கொண்டு வராமல், வட மொழி மந்திரத்தில் மாத்திரம்

வெறுப் புற்றுக் கூறுவது, தாயைப் பழித்தது போன்று உளவாம் பாவத்துக்கு ஆள் ஆவார்கள் என்று விசார பூர்வ மாக உணர்வார்க ளாக.

இன்னும், உலக வியவகாரத்திலும், நூல் வழக்கிலும், எழுத ஆரம்பிக்கும் போது, "சிவ மயம்" என்று எழுதித் தான், பின்னர் தங்கள் விருப்பத்தை எழுதுகின்றனர். "சிவ" என் பதன் பின்னர் "மயட்" பிரத்தியயம், அதாவது, விகுதி வருகிறது. அது மிகுதி பரிணமம் விகாரம் முதலிய பல பொருள்களை உணர்த்தும். அவ் வாறுய மயட் விகுதி, தமிழ் இலக்கண நூல்கள் பலவற்றிலும் இல்லை. அதற்கும் வேறு ஒரு சொல் தமிழ்ச் சொல் லாகக் கற்பிக்க லாம். "ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:", "ஸ்ரீ ராம ஜயம்" என்பதற்குப் பதி லாக வேறு ஒரு தமிழ் சொல் உண்டு பண்ண லாம். மகிதர்களையும், தமிழ் மகிதர், வட மொழி மகிதர், இரு மொழி மகிதர், பல மொழி மகிதர்கள் என்று பல பிரிவுக ளாகப் பிரித்து வைக்க லாம். முதலில் காரண மொழி ஒன்றை வைத்துக் கொண்டு தான் காரிய மொழிகளை உத்பத்தி செய்ய வேண்டும்.

பல மொழியாளரும், பல மதத்தரும், ஒருவருக் கொருவர் நீண்ட காலத் தொடர் புடையவர்கள் என்றே தெரிகின்றது.

நாகப் பட்டினத்துக்குப் பக்கத்தில் உள்ள, வேளாங் கண்ணி என்னும் ஊரி லிருந்தவர்கள், கிருஸ்துவ மதத்தில் சேர்ந்து கிருஸ்தவர் ஆன பின்னரும், பொருள் வருவாயைக் கருதி, மாரியம்மன் கோவிலை விடாது பற்றிக் கொண்டு, இந்து மத அநுஷ்டானங்களையும் செய்து, இரு மதக் கலப் புடையராக இன்னும் நடக்கின்றனர்.

மகமதிய மதத்தினர் - பழநி - மதுரை - திருப்பரங் குன்றம் முதலிய இடங்களில் உள்ள சுப்பிரமணிய சுவாமி கோவிலுக்குப் பின் புரம் பாத்தியம் கொண்டாடித் தொழுகையராக இன்றும் இருந்து வருகின்றனர்.

ஆகையால், தமிழ்க் கடவுளே மகமதிய மதத்தின் மநிதரையும், கிருஸ்துவ மதத்து மநிதரையும் உண்டுபண்ணினர் என்று கூற முடியுமா?

எல்லா மதத்திற்கும் ஒரே கடவுளாக இருக்க, மதங்கள் தோறும் வெவ்வேறு கடவுள் இருக்கிறார் என்று கடவுளுக்கும், சீவர்கள் போன்று நாநாத் தன்மை கூறுதல் பொருந்துமா ?

சம்ஸ்கிருதப் பாஷைக் கலப்பு மிகுதி யுடையவர்களாக இருந்து, தனித் தமிழ். தனித் தமிழ் என்று உரத்திச் சொல்வது, இந்து நாடார் கிருத்தவ நாடாரோடு சம்பந்தம் பண்ணிக் கொண்ட பின், கிருத்தவர்கள் "நாங்கள் நாடார்" என்று சொல்வதும், மகமதிய மதத்தில் சேர்ந்த பின்னர் இந்து மதத்தவரோடு சம்பந்தப்படுவதால் நாங்கள் பிள்ளை மார் தேவமார் ஐயர் முதலியவர்கள் என்று சொல்வதும், இந்து மதத்திற்கும், மகமதிய மதத்திற்கும், கிருஸ்தவ மதத்திற்கும் இழிவு செய்ததாகவே முடிவது போலவே ஆகும். தனித் தமிழ் வாழ்வு வாழா திருந்துகொண்டு, வேறு பாஷைக் கலப்பை அறவே நீக்காமல், வாக்கால் மாத்திரம் கூறுவது வாய்ப் பறை அடித்த லாக முடியும்.

தவறாக உச்சரிக்கும் மந்திரம் முதலியவற்றிற்குப் பலன் கொடுக்காவிட்டாலும், விபரீத

பல ஞகிய நாக் குழறல் கை கால் வீங்கல் கோணல் ஆதல் நரகம் சேறல் முதலியவற்றை உண்டாக்க மந்திரங்கட்கு ஆற்றல் உண்டா? எழுத்துக்களில் உள்ள 5 எழுத்துக்களின் சேர்க்கையே மந்திரங்க ளாகலின் என்று சிலர் கூறுகின்றனர். அதற்கு விடை, வெற்றிலை பாக்குச் சுண்ணும்பு மூன்றும் சம மாகக் கலந்து சுவைத்தால், முன் னிருந்த பச்சை, வெண்மை, அரக்கு வர்ணங் (கலர்) கள் மாறிச் செந் நிற முண்டாகி, முகம் உதடு பல் முதலியவற்றை அழகு செய்கின்றது. அங்ஙனம் இன்றிச், சுண்ணும்பு அதிகரித்தால், வாய் வேதல், குடல் வேதல் முதலியவற்றையும், பாக்கு அதிகரித் தால், முகத்தில் சோகை முதலியவற்றையும், வெற்றிலை அதிகரித்தால், நாக்கு எரிவு முத லியவற்றையும் உண்டாக்கி, செந் நிறம் கெட்டு, வேற்று நிறம் உண்டாகி, அழகுக்கு விரோத மாக, முகத்தினைச் சுழித்தல் முதலியன உண் டாக்கிக் துன்பத்திற்குக் காரண மாக இருப் பது செடப் பொருளிடத்துக் காண்பது போன்று, ஒலி வடிவ எழுத் தாகிய செடப்

பொருளிடத்தும் நன்மை தீமைகளைச் செய்யும் ஆற்றல் இருக்கின்றன என்று உணர வேண்டும்.

மந்திர சாஸ்திரம், எழுத்துக்களின் கலப்பினால், நன்மையும், தீமையும் அயக் காந்தச் சேர்க்கை போன்று, உண்டாம் என்பதைத் தான் பல வழியாலும் கூறுகின்றது.

ஹிந்தியாவை விட்டுப் பாகித்தானும், தமிழ் நாட்டை விட்டு ஆந்திராவும், பிரிந்தது போல், வட மொழியிலிருந்து பிரிந்து தென் மொழியாக, அதிலும் தனித் தமிழ் மொழியாகத் தனித்திருக்க வேண்டும் என்று கருத்துடையவராக இருப்பின், எல்லாவற்றிலும் வேறுபட்ட பாகிஸ்தான்காரர் போன்றும், எல்லா வியவகாரங்களிலும் பிரிந்த ஆந்திராக்காரர் போன்றும், வடக்கேயிருக்கிற கைலாயம், வைகுண்டம், மத நூல்கள், மந்திரங்கள் முதலியவற்றை எல்லாம் கலப்பின்றி, வட மொழியார், கைலாசம் வைகுண்டம் வடக்கேயும், மந்திரங்கள் மத நூல்கள், ஜோதிஷம் வைத்தியம் முதலியன வட மொழியிலும் இருப்பது போன்று, தென்

பல மொழியாளரும், பல மதத்தரும், ஒருவருக் கொருவர் நீண்ட காலத் தொடர் புடையவர்கள் என்றே தெரிகின்றது.

நாகப் பட்டினத்துக்குப் பக்கத்தில் உள்ள, வேளாங் கண்ணி என்னும் ஊரி லிருந்தவர்கள், கிருஸ்துவ மதத்தில் சேர்ந்து கிருஸ்தவர் ஆன பின்னரும், பொருள் வருவாயைக் கருதி, மாரி யம்மன் கோவிலை விடாது பற்றிக் கொண்டு, இந்து மத அநுஷ்டானங்களையும் செய்து, இரு மதக் கலப் புடைய ராக இன்னும் நடக்கின்றனர்.

மகமதிய மதத்தினர் - பழநி - மதுரை - திருப்பரங் குன்றம் முதலிய இடங்களில் உள்ள சுப்பிரமணிய சுவாமி கோவிலுக்குப் பின் புரம் பாத்தியம் கொண்டாடித் தொழு கைய ராக இன்றும் இருந்து வருகின்றனர்.

ஆகையால், தமிழ்க் கடவுளே மகமதிய மதத்தின் மநிதரையும், கிருஸ்துவ மதத்து மநிதரையும் உண்டுபண்ணினர் என்று கூற முடியுமா ?

எல்லா மதத்திற்கும் ஒரே கடவுளாக இருக்க, மதங்கள் தோறும் வெவ்வேறு கடவுள் இருக்கிறார் என்று கடவுளுக்கும், சீவர்கள் போன்று நாநாத் தன்மை கூறுதல் பொருந்துமா ?

சம்ஸ்கிருதப் பாஷைக் கலப்பு மிகுதி யுடையவர்களாக இருந்து, தனித் தமிழ். தனித் தமிழ் என்று உரத்திச் சொல்வது, இந்து நாடார் கிருத்தவ நாடாரோடு சம்பந்தம் பண்ணிக்கொண்ட பின், கிருத்தவர்கள் "நாங்கள் நாடார்" என்று சொல்வதும், மகமதிய மதத்தில் சேர்ந்த பின்னர் இந்து மதத்தவரோடு சம்பந்தப்படுவதால் நாங்கள் பிள்ளைமார் தேவமார் ஐயர் முதலியவர்கள் என்று சொல்வதும், இந்து மதத்திற்கும், மகமதிய மதத்திற்கும், கிருஸ்தவ மதத்திற்கும் இழிவு செய்ததாகவே முடிவது போலவே ஆகும். தனித் தமிழ் வாழ்வு வாழா திருந்துகொண்டு, வேறு பாஷைக் கலப்பை அறவே நீக்காமல், வாக்கால் மாத்திரம் கூறுவது வாய்ப் பறை அடித்த லாக முடியும்.

தவறாக உச்சரிக்கும் மந்திரம் முதலியவற்றிற்குப் பலன் கொடுக்காவிட்டாலும், விபரீத

பல ஞகிய நாக் குழறல் கை கால் வீங்கல் கோணல் ஆதல் நரகம் சேறல் முதலியவற்றை உண்டாக்க மந்திரங்கட்கு ஆற்றல் உண்டா? எழுத்துக்களில் உள்ள 5 எழுத்துக்களின் சேர்க்கையே மந்திரங்களாகலின் என்று சிலர் கூறுகின்றனர். அதற்கு விடை, வெற்றிலை பாக்குச் சுண்ணும்பு மூன்றும் சமமாகக் கலந்து சுவைத்தால், முன்னிருந்த பச்சை, வெண்மை, அரக்கு வர்ணங் (கலர்) கள் மாறிச் செந்நிற முண்டாகி, முகம் உதடு பல் முதலியவற்றை அழகு செய்கின்றது. அங்ஙனம் இன்றிச், சுண்ணும்பு அதிகரித்தால், வாய் வேதல், குடல் வேதல் முதலியவற்றையும், பாக்கு அதிகரித்தால், முகத்தில் சோகை முதலியவற்றையும், வெற்றிலை அதிகரித்தால், நாக்கு எரிவு முதலியவற்றையும் உண்டாக்கி, செந்நிறம் கெட்டு, வேற்று நிறம் உண்டாகி, அழகுக்கு விரோதமாக, முகத்தினைச் சுழித்தல் முதலியன உண்டாக்கிக் துன்பத்திற்குக் காரணமாக இருப்பது செடப் பொருளிடத்துக் காண்பது போன்று, ஒலி வடிவ எழுத் தாகிய செடப்

பொருளிடத்தும் நன்மை தீமைகளைச் செய்யும் ஆற்றல் இருக்கின்றன என்று உணர வேண்டும்.

மந்திர சாஸ்திரம், எழுத்துக்களின் கலப்பி னால், நன்மையும், தீமையும் அயக் காந்தச் சேர்க் கை போன்று, உண்டாம் என்பதைத் தான் பல வழியாலும் கூறுகின்றது.

ஹிந்தியாவை விட்டுப் பாகித்தானும், தமிழ் நாட்டை விட்டு ஆந்திராவும், பிரிந்தது போல், வட மொழியிலிருந்து பிரிந்து தென் மொழி யாக, அதிலும் தனித் தமிழ் மொழி யாகத் தனித் திருக்க வேண்டும் என்று கருத்துடையவ ராக இருப்பின், எல்லாவற்றிலும் வேறுபட்ட பாகிஸ் தான்காரர் போன்றும், எல்லா வியவகாரங்களி லும் பிரிந்த ஆந்திராக்காரர் போன்றும், வடக்கே யிருக்கிற கைலாயம், வைகுண்டம், மத நூல் கள், மந்திரங்கள் முதலியவற்றை எல்லாம் கலப் பின்றி, வட மொழியார், கைலாசம் வைகுண்டம் வடக்கேயும், மந்திரங்கள் மத நூல் கள், ஜோதிஷம் வைத்தியம் முதலியன வட மொழியிலும் இருப்பது போன்று, தென்

ளுடைய சிவனுக்கும் தென் மொழியாள ராகிய தமிழர்கட்கும், தனித் தமிழ்த் தேச மாகிய தெற்கேயே கைலாசம், வைகுண்ட லோகமும், மந்திரங்கள், மத நூல்கள், வைத்தியம், ஜோதிஷம் முதலியன தனித் தமிழ் மொழியிலும் செய்யவேண்டும். வட மொழியார் ஞானத்தினுல் மூன்று தேக நிவிர்த்தி யாகிய வட மொழி வீடு என்று சொன்னுல், தென் மொழியார் சரியை கிரியை யோகங்களினுல் இரு சரீர நித்திய மாகிய தென் மொழியாளர் வீடு என்று கூறி நிலை நாட்ட வேண்டும். தெற்கே இருக்கும் எம தர்ம ராஜாவை வட மொழியாளர் இருக்கும் வடக்கு நோக்கிச் செல்லும்படி செய்து, தென் மொழியாள ராகிய தென்புலத்தார் தீமையை அநுபவிக்க, அந்த ஸ்தானத்தில், தென் மொழியாள ராகிய அந்தகன் ஒருவரை நியமிக்க வேண்டும். அதற்கு உரியவரைத் தேர்ந்தெடுக்க எலெக்ஷன் வைக்க வேண்டும். வட மொழிக் கடவுளோடு ஒன்றுபட்டிருந்தாலும் இருந்த தென் மொழியாளர்கள், பிரிந்தவுடன், வட மொழிக் கடவுளரிடத் திருந்தும் பிரிந்து வருகின்ற தென் மொழியாளருக்குத் தென் மொழிக் கடவுள்

இருக்கும் தென் கைலாயம் - தென் வைகுண்டம் முதலிய இடங்கட்கு வந்து சேருமாறு தென் மொழி விண்ணப்பப் பத்திரங்கள் போட வேண்டும். மகமதியரும், ஹிந்துக்களும் போன்று, எல்லா விதத்திலும் வட மொழியாளருடன் தென் மொழியாளருக்குக் கலப்பே கூடாது என்று கருதினுல், பிரிந்து தனி ஆட்சி செய்ய வேண்டியதே ஆகும்.

முன்னோர்கள் சம தெரிசிகளாய் உலகத்தோடு ஒட்ட ஒழுகினுர்கள். இக் காலத்து மேதாவிகள் பிரிந்து தனி ஆட்சி ஆள நினைக்கிருர்கள். வட மொழிக் கலப் பின்றி நீண்ட நாளில் விடுபட்டாலும், வடக்கே உள்ள ஹிந்திப் பாஷைக் கலப் பின்றி நில வுலகில் வாழ முடியாது.

தேவாரம் - திரு வாசகம் - திருப் புகழ் - திருக் குறள் - தொல் காப்பியம் - நன் னூல் - தாயுமான சுவாமிகள் பாடல் - வட லூர் ராம லிங்க சுவாமிகள் அருட் பா - நா லாயிரப் பிரபந்தம் - சைவ சித்தாந்த சாஸ்திரம் 14. புராணங்கள் -

வைத்திய நூல் - முதலிய இதுகாறும் சில உலகில் வழங்கி வரும் நூல்கள் யாவும் வட மொழிக் கலப்புடைய தாக இருக்கின்றமையின், அவற்றை அறவே ஒழித்து விடவேண்டும்.

தென் னாட்டுக் கோவில்களில், ஆதி சைவர் களாகிய ஆரியங் கற்றவர்களைப் பூசைக்கு வைக் காமல், தனித் தமிழ்ச் சாதியாராய்த், தனித் தமிழராய்த் தேர்ந் தெடுத்துக் கடவுள் தொண் டுக்கு வைக்க வேண்டும். கலப் பற்ற தமிழரும், கலப் பற்ற தமிழ் மொழியும், பரவிய பின், வட மொழி மந்திரங்கள் தேவை யில்லை என்று சொல்லல் தகுதி யுடைய தாகும். "நரி திரா க்ஷைப் பழம் புளிக்கும்" என்று சொன்னது போலும், "பந்தியில் உட்காராதே எழுந்து போ" என்று சொன்னால், இலை கிழிசல் என்று சொல்பவன் கதை போலும், மந்திரங்களைத் தவ றின்றி உச்சரித்துப் பலன் பெறத் தெரியாமல், வட மொழி மந்திரம் வேண்டாம் என்று சொல் வது இருக்கின்றது என்று உணர வேண்டும்.

வட மொழி மந்திரப் பிரியர்கள், வட மொழி மந்திரங்களைச் செபிக்க லாம். தமிழ் மொழி

மந்திரப் பிரியர்கள், தமிழ் மொழி மந்திரங்களைச் செபிக்க விரும்பின், தொட்ட தெல்லாம் கரி யாக்குவார் போன்ற அதிர்ஷ்ட விரோதிக ளின்றிய தக்காராய்த் தேர்ந்து அவரால் உண்டு பண்ணப்படும் புதிய மந்திரங்களைத் தமிழ் மொழி யிலேயே உச்சரித்துத் தென் னுடைய சிவன் திருவடியைத் தென் னாட்டில் அடைந்து தென் னாட்டிலே தனித்து யிருப்பார்களாக.

சுபம் அஸ்து.

---

## 1. பிரணவம்.

ओम् ஓம்.

अ—उ—म् அ—உ—ம்.

வட மொழி பாணினி வியாகரணப்படி, அகர உயிரின் முன் உகர உயிரோ, ஓகார உயிரோ வரின், ஓகார ஔகார மாகிய குண சந்தி யாகும். தமிழில் உள்ள, தொல் காப்பியம் - நன் னூல், வீர சோழியம், நேமி நாதம், இலக்கண விளக்கம் முதலிய இலக்கணம் விதிக்கும் நூல்கள் அகர உயிரின் முன் உகர உயிர் வரின் வகர உடன்படு

மெய் பெற்றுப் புணரும் என்பதால், அவ்வும் என்ருகுமே அன்றி, ஓம் என்று ஆக மாட்டாது.

ஆதலால், வட மொழிப் பிரணவமே ஓம் என்ப தாகும். அகாம் ஒரு மாத்திரை, உகாம் ஒரு மாத்திரை, மகா மெய் அரை மாத்திரை அவயவங்கட் காம். ஓ என்று சந்தி யாகும் பொழுது மூன்று மாத்திரை யாகி மகா மெய்யும் சேர்ந்து மூன் றரை மாத்திரை ஆகின்றது.

இந்த ஓங்கார மந்திரத்தை, பிரஹ்மத்திற்கு உடல் என்று வேதங்கள் கூறுகின்றன. தனிப் பிரணவத்தை மாத்திரம் சந்யாசிகள் தான் உச்சரிக்கலாம் என்றும், மற்றையோர்கள் இதா மந்திரங்களுக்கு முதலில் சேர்த்து உச்சரிக்க வேண்டும் என்றும் வேதத்திலே விதிக்கப்பட்டிருக்கிறது. இதனை ஒரு மாத்திரை முதல் 64 மாத்திரை வரைக் கூட்டி உச்சரிக்கும் மதத்தினர் பலர் இருக்கின்றனர். அவை யாவும் பலன் மிகுதியைக் கருதிச் செய்யப்படுவனவும் ரிஷிகள் பாம்பரை அநுட்டானமும் ஆகும். வேதாந்த நூ லாகிய பஞ்சதசியிலும் வித்தியாரண்ய

சுவாமிகள் "தீர்க்கப் பிரணவம் உச்சார்ய" என்றும் கூறியிருக்கின்றார்கள்.

உலக வழக்கிலும் கூட இந்த வட மொழிப் பிரணவத்தையே கேள்விக்கு விடை இறுக்கும் போது, "ஆம்" என்பதற்குப் பதிலாக, "ஓம்" என்று விடை இறுக்கின்றனர் பண்டிதர் பாமரர் ஆண்பாலார் பெண்பாலார் யாவரும்.

இந்தப் பிரணவத்தை, நாய் முதலிய மிருகங்களும் உச்சரிக்கின்றன என்று உபநிஷத் கூறுகின்றது.

நூற்றெட்டு எண்ணிக்கையில்

94 - தார சார உபநிஷத்,

யஜுர் வேத இரண்டாவது பாதம்,

"ஓம்" என்னும் இவ் வக்ஷரம் பரம் பிரஹ்மம். அதுவே உபாசிக்கத் தக்கது. இதுவே சூக்ஷ்மமான அஷ்டாக்ஷரம் ஆகின்றது. அவ் இவ் எட்டுருவத் தன்மை எண் விதத்தால் ஆகின்றது. அகாரம் முதல் அக்ஷரம் ஆகின்றது. உகாரம் இரண்டாவது அக்ஷரம் ஆகின்றது. மகாரம்

மூன்றாவது அக்ஷரம் ஆகின்றது. பிந்து நான்காவது அக்ஷரம் ஆகின்றது. நாதம் ஐந்தாவது அக்ஷரம் ஆகின்றது. கலை ஆறாவது அக்ஷரம் ஆகின்றது. கலாதீதம் ஏழாவது அக்ஷரம் ஆகின்றது. அதன் மேலானது எட்டாவது அக்ஷரம் ஆகின்றது. தாண்டுவிக்குந் தன்மையில் தாரகம் ஆகின்றது. அந்தத் தாரகமே பிரஹ்மம் என நீ உணர்க. அஃதே உபாசிக்கத் தக்கதாம்" என்று கூறுகின்றது.

---

## 2. சிவ பஞ்ச அக்ஷர மந்திரம்.

ओम् नमः शिवाय — ओम् शिवाय नमः

ஓம் நம: சிவாய - ஓம் சிவாய நம:

ஓம் சிவனுக்கு வணக்கம் என்பது பொருள்.

"ஓம் நம சிவாய" என்பது ஸ்தூல பஞ்சாக்ஷரம் என்றும், "ஓம் சிவாய நம:" எனபது சூக்ஷ்ம பஞ்சாக்ஷரம் என்றும், "ஓம் சிவ" என்பது காரண பஞ்சாக்ஷரம் என்றும், நூல்கள் கூறும்.

அவயவப் பொருள் - சிவ என்னும் பெயர்ச் சொல் வேற்றுமை உருபில், நான் காம் வேற்று மை ஒருமை உருபு "ஙி" என்னும் எழுத் தாகும். "ஙேர் ய:" என்னும் பாணினி வியா கரண சூத்திரப்படி, "ஙி" என்னும் உருபு ஸ்தா நத்தில், "ய" காம் என்னும் எழுத்து உரு பாக வரும். "நம:" என்பது வணக்கம் என்பது பொருளாகும். நம: என்பது வினைச் சொல் லாகும். ஓம் என்பது பீஜ அக்ஷரம் என்று பெயர். பிரணவம் இன்றி உச்சரிக்கும் மந்திரம் உயிர் அற்ற மந்திரம் ஆகும். ஓம் என்பது பஞ்சாக்ஷரத் திற்குப் புறம்பே இருப்பதாகும். ந. ம. சி. வ. ய. என்னும் இவ் வைந்து எழுத்தும் பஞ்சாக்ஷரம் ஆம். நம: என்னும் கிரியைச் சொல்லின் ஈற்றில்: விசர்க்கம் என்னும் எழுத்தும், நான் காம் வேற்று மை உரு பேற்கும் போது, பகுதி யாகிய சிவ என்பதில் உள்ள அகரம், ஆகார மாக நீண்டு சிவா எனவும் நிற்கும். இவ் வாறு பத முடிவும், பொருளும் ஆகும்.

இதனை, மநம் வாக்குக்களை ஒரு வழிப்பட நிறுத்தி, லக்ஷம் முறை பஞ்சாக்ஷர செபம் செய்

தால், அஷ்ட மகா சித்தி உண்டாகும் என்று ஸ்காந்தத்தில், உள்ள சூத சம்ஹிதையில், சிவ மாகாத்மிய கண்டத்தில் பலன் கூறப்பட்டிருக்கின்றது. தவறுகச் செபிப்போருக்குக் கை கால் நொண்டியாதல், நாக் குழறல், பல் கிட்டுதல், முதலிய விபரீத பலனும் ஆண்டே கூறப்பட்டிருக்கின்றது.

பேதி மருந்தின் தன்மையை உணர்ந்து, பேதி மருந்தை உண்போருக்கு, விரைவில் மலங் கழியும்படியாக அநுகூல மான முறையில் நடந்து விபரீத மான முறையில் நடவாதிருப்பதற்குக் காரண மாகி, விரைவில் எண்ணிய பலனைக் கொடுக்கின்றது போல, மந்திரத்தின் பொருளை அறிந்து செபிப்போருக்கு, அநுகூல மான முறையில் நடந்து, விபரீத மான முறையில் நடவாதிருப்பதற்குக் காரணம் ஆகி, அதி விரைவில் எண்ணிய பலனை அநாயாச மாகக் கொடுக்கின்றது. பொருள் தெரியாமல் ஜபிப்பதால் ஐயந் திரிவு உண்டாகி, சோம்பல் நித்திரை மயக்கங்களைப் பொருந்தி, அசிரத்தையினுல் எண்ணிய பலனை விழலுக் கிறைத்த நீர் போல, என்றும்

அடைய முடியாது போகின்றது என்பதைக் கூர்ந்த மதியினால் நோக்கவேண்டும்.

திருவாசகம், "நமச் சிவாய வாழ்க" (சிவ புராணம் அகவல் 1), "போற்றி யோம் நமச் சிவாய (திருச் சதகம் 62)", "நமச் சிவாய என் றுன் னடிபணியாப் பேயன் ஞகினும் (செத் திலா 7)", "சிவாய நம எனப் பெற்றேன்" (திரு வசறவு 10) என்றும், சம்பந்தர் தேவாரத் தில், "நாதன் நாமம் நமச் சிவாயவே". (நமச் சிவாயப் பதிகம்) என்றும, சுந்தரர் தேவாரத் தில், "சொல்லு நா நமச் சிவாயவே" (நமச் சிவாயப் பதிகம்) என்றும், திரு நாவுக் கரசர் தேவாரத்தில், "நற்றுணை யாவது நமச் சிவாய வே" (நமச் சிவாயப் பதிகம்) என்றும், வருவன யாவும் வட மொழி மரபு பற்றிக் கூறப்பட்டன வே ஆகும். முன் இருந்த நால்வரும் தென் மொழிப் பஞ்சாக்ஷரம் ஒன்று இருக்கு மாயின், அதனையே கூறியிருப்பார்கள். நீண்ட கால மாக அங்ஙனம் இன்மையின், வட மொழிப் பஞ்சா க்ஷரத்தையே செபிப்பவரும், செய்யுளில் கூறு வோருமா யிருந்தனர் என விவேகித்து உணரல்

நலம் ஆகும், அங்ஙனம் இன்றி, அவயவ ஆற்றல் கொண்டு, "நம சிவய என்பது தென் மொழிப் பஞ்சாக்ஷரம், நகரம் திரோதான் சக்தி என்றும், மகரம் மலம் என்றும், சிகரம் சிவன் என்றும், வகரம் சக்தி என்றும், யகரம் ஆன்மா என்றும் கூறின், அது மாபன்ரும். நம: என்பதில் உள்ள விசர்க்கத்துக்கும், நான் காம் வேற்றுமை யுருபு ய கரம் வரும் போது, வ கர அகரம் ஆகார மாக நீளுவதற்கும், பொருள் பயவாமல் போகின்றது.

வேதத்தில், இறைவன் பயன் அற்ற சொற் களைக் கூறுர் ஆகலின், வேதத்தில் உள்ள எழுத் துக்கள் யாவும் பயன் உடையன வாகவே இருக்கவேண்டும். அதன் பொருள் புறமொழி யாள ராகிய நம (பசுவு) க்கு விளங்காமல் இருப் பதைக் கொண்டு, வட மொழிக் குரிய தொல் லாசிய (தேவ) ர்கட்கும் பொருள் தெரியாது, செம்மறி யாட்டுப் பரம்பரை யாகச் செல்கின்றனர் என்று ஆணவத் தடிப்பால் அறைவது அழகா காது.

இச் சிறு நூலில் விரிப்பில் பெருகும் என அஞ்சி விரிக்காது விடுத் தாம்.

## பஸ்ம ஜாபால உபநிஷத்.

2 வது அத்தியாயம் 4 வது மந்திரம்.

"ஆறு எழுத் தாவது, அல்லது, எட் டெழுத் தாவது, சைவ மந்திரம் ஜெபிக்கத்தக்கது.

"ஓம் என முதலில் கூறுக. நம: என்று பின்னர்க் கூறுக. அதன் பின் சிவாய என மூன்று எழுத்தைக் கூறுக" என்றும்,

"ஓம் என முதலில் கூறுக. நம: என்று பின்னர்க் கூறுக. அதன் பின்னர் மஹா தேவாய என ஐந் தெழுத்தைக் கூறுக இதனைப் பார்க் கிலும் மேலான தாரக மந்திரம் இல்லை. இந்தப் பஞ்சாக்ஷரமே தாரக மாம்" என்றும், ஜபித்தல் முறையும், பலனும், கூறுகின்றது.

வைஷ்ணவரா யிருந்து சைவர் ஆன ஹாரதத்த சிவாச்சார்யர் என்னும் பெரியார், பஞ்சாக்ஷரத்தின் பேரில் ஒன்பது விதப் பொருள் படச் சம்ஸ்கிருதத்தில் ஒரு பாஷ்யம் எழுதி யிருக்கின்றார்.

வட மொழி பயின்றவர்களும், உபநிஷத்துக் களும், உச்சரிப்பைச் சிதைத்து, "சிவய" என்று செபிக்கும்படி கூற வில்லை.

---

## 3. நாராயண அஷ்ட அக்ஷரம்.

ओम् नमो नारायणाय

ஓம் நமோ நாராயணாய.

ओम् - नार - अयन - य - नमः

ஓம் - நார -, அயந - ய - நம:

என்பது அவயவப் பகுப் பாம்.

நாரம் - நீர் - அயநம் - இடம் - ய என்பது நான் காம் வேற்றுமை யுருபு. நம: வணக்கம். நீரை இட மாகக் கொண்டவருக்கு வணக்கம். அதாவது, அலை கடலில் பள்ளிகொண்டவருக்கு வணக்கம் என்பது பொரு ளாம். ஓம் என்னும் பிரணவமும் சேர்ந்து தான் அஷ்டாக்ஷரம் ஆகும்.

"நேர் ய:" என்னும் பாணினி சூத்திரப்படி, நான் காம் வேற்றுமை ஒருமை உருபு "ஙே" என்பதாகும். அதனுடைய ஸ்தானத்தில் ய காரம் வரும்.

நாரமும், அயநமும், சேரும் போது, "ரிடுரஷா ணும் மூர்த்த:" என்னும் பாணினி சூத்திரப்படி ந காரம் ண காரம் ஆகின்றது. அதாவது, அயநம் என்பது, "அயணம்" என்று ஆகின்றது. ஓம் நாராயணனுக்கு வணக்கம் என்று பொருள் முடிவாகின்றது.

ஈண்டு, பிரணவம் அஷ்டாக்ஷரத்துக்குள் சேர்ந் திருப்பது மந்திர வேத்தாவின் கருத்தாம்.

வட கலைஞருக்கு இதில் விவாதமே இல்லை.

தென் கலைஞர், தென் மொழி அஷ்டாக்ஷரம் வேறு இருக்கின்ற தென்றுவது, அல்லது, "ஓம் நமோ நாராயணாய" என்பது, தென் மொழி அஷ்டாக்ஷரம் தான் என் றுவது விவாதிப்ப தில்லை. பகுதி விகுதி பெயர்ச் சொல், வினைச் சொல் முதலியன உணர்ந்து, வட மொழி

யுணர்ச்சியும் உடையவர்களாய், வட மொழித் துவேஷம் இன்றியவர்க ளாக இருக்கின்றவர்க ளாகலின்.

## பெரியாழ்வார் திருப் பல் லாண்டு.

ஏடுநி லத்தில்இ டுவதன் முன்னம்வந் தெங்கள்குழாம்புகுந்து. கூடும னமுடை யீர்கள்வ ரம்பொழி வந்துஒல்லைக் கூடுமினோ, நாடும்ந கரமும்நன் கறியந மோநாராய ணயவென்று, பாடும னமுடைப் பத்தருள் ளீர்வந்து பல் லாண்டு கூறுமினே. 4

அவ்வழக் கொன்றுமில் லாஅணி கோட் டியர் கோன்அபி மானதுங்கன், செல்வனைப் போலத் திருமாலே நானும் உனக்குப் பழவடி யேன், நல்வகை யால்நமோ நாராய ணவென்று நாமம்ப லபரவி, பல்வகை யாலும்ப வித்திர னேஉன்னைப் பல்லாண்டு கூறுவனே. 11

பல்லாண் டென்றுப வித்திர னைப்பர மேட்டி யைச் சார்ங்கம்என்னும், வில்லாண் டான்தன்னை வில்லிபுத்தூர் விட்டு சித்தன்வி ரும்பிச் சொல்,

*நல்லாண் டென்றுந வின்றனைப் பார்நமோ நாராய ணாயஎன்று, பல்லாண் டும்பர மாத் மனைச் சூழ்ந்திருந் தேத்துவர் பல்லாண்டே.* **12**
*என்றும்,*

## இராம லிங்க சுவாமிகள் திரு அருட்பா.

*காராய வண்ண மணிவண்ண கண்ண கன சங்கு சக்ர தாரீன், சீராய தூய மலர்வாய நேய ஸ்ரீராம ராமன் எனவே, தாராய வாழ்வு தரு நெஞ்சு சூழ்க தாமோத ராய நமவோம், நாராய ணாய நமவாம ணாய நமகேச வாய நமவே.*
*என்றும்,*

## தமிழ் நூல்கள் கூறுவதும் உரைற்பாற்று.

நூற் றெட்டு எண்ணிக்கையில்

**94** - தார சார உபநிஷத்,

இது ரிக் வேத முதல் பாதம்.

*பாரத்வாசர் யாக்ஞ வல்கியரை, தாரகம் யாது? தாண்டுவிப்பது எது எனக் கேட்டார். அந்த யாக்ஞவல்கியர் கூறினர்.*

"ஓம் நமோ நாராயணாய" என்னும் தாரகம் சிதாத்மகம் என உபாசிக்கத் தக்கது. ஓம் என்பது ஏக அக்ஷரம் ஆத்ம ஸ்வரூபம். நம என்பது இரண்டெழுத்து பிரகிருதி ஸ்வரூபம். "நாராயணாய" என்பது பஞ்சாக்ஷரம் பரப் பிரஹ்ம ஸ்வரூபம் என, எவன் இவ் வாறு உணர்கின்றனனோ, அவன் அமிருதன் ஆகின்றான். ஓம் என்பது பிரஹ்மா ஆகின்றனர். ம காரம் ருத்திரன் ஆகின்றனர். ந காரம் ஈசுவரன் ஆகின்றனர். ஏ காரம் அண்ட விராட் ஆகின்றனர். ய காரம் புருஷன் ஆகின்றனன். ண காரம் பகவான் ஆகின்றனர். ய காரம் பரம ஆத்மா ஆகின்றனர். இதுவே நாராயண னுடைய அஷ்டாக்ஷரம் பரம புருஷன் ஆகின்றனன். இது ரிக்வேத முதல் பாதம். என "ஓம் நமோ நாராயணாய" என்னும் அஷ்டாக்ஷர மந்திரம் இஃது ஆம் எனத் தாரசார உபநிஷத்துக் கூறுகின்றது.

நாராயண உபநிஷத், 3 வது கண்டத்தில்,

"ஓம் என முதலில் கூறுக. நம: என்று பின்னர் கூறுக. நாராயணாய என மேற் கூறுக.

ஓம் என்பது ஓர் எழுத் தாகும். நம: என்பது இரண் டெழுத் தாகும். நாராயணுய என்பது ஐந் தெழுத் தாகும். இதுவே நாராயணருடைய எட் டெழுத்துப் பத மாம்." என்று இவ் வாறு கூறப்பட்டிருக்கின்றது.

மேற்படி நா லாவது கண்டத்தில்,

"ஓம் நமோ நாராயணுய என்னும் மந்திரத் தினை உபாசிப்பவன் வைகுண்ட பவநத்தை அடைகின்ருன்" என்று பலன் கூறப்பட்டிருக் கின்றது.

இந்த அஷ்டாக்ஷர மந்திரத்தை, வேதாந்தத் துறவிகள், பிறரை வணங்கும் போதும் உச்சரித் தே வணங்குவர், மற்றையவர் வணங்கும் போது, மறு மொழி கூறுங் காலத்திலும் இந்த மந்திரத் தினை உச்சரித்தே ஆசீர்வதிப்பார்கள்.

## 4. சுப்பிரமணிய ஷடு அக்ஷரம்.

ओम् शर वण भव

ஓம் சர வண பவ.

ओम् - शर - वन - भव

ஓம் சர வந பவ என்பது அவயவ பகுப் பாம்.

சர என்னும் சொல்லும், வந என்னும் சொல்லும், சேரும் போது, பாணினி வியாகரணப்படி "ரிஷ ரஷாணும் ஸமர்த்த :" என்னும் சூத்திரம் கொண்டு, வந என்னும் சொல், வண என்று ஆகி, "சர வண" என்று ஆகிறது. பவ என்பது பிறத்தற் காம். ஓம் நாணல் காட்டில் பிறந்த வரே என்று பொருள் முடி பாம்.

ஓம் என்பது ஷடக்ஷரத்துக்கு வெளியில் உள்ளது ஆம்.

சுப்பிரமணியருக்கு அவருடைய பிறப்பினைக் கூறிய மாத்திரத்தில் சந்தோஷப்பட்டு விரைவில்

எழுந்தருளி வந்து, ஜெபிப்போருக்குச் சீக்கிரத்தில் பலனைக் கொடுப்பார் என்பது மந்திர வேத்தாவின் கருத் தாம்.

அவரது விளிப் பெயரைக் கூறுவதும் வணக்கமே யாகும்.

“சர ஹண பவ” என்று கூறுவது, பொருள் தெரியாது மந்திரத்தினைக் கொலை செய்வதாகும். இவ் வாறு ஜெபிப்பதால் பலன் கிட்டாமல் போவதோடு நிற்காமல், மந்திர வேத்தாவின் கோபத்திற் குள் ளாகி, நாக் குழறல் முதலிய விபரீத பலனும் உண்டாம் என உணர வேண்டும்.

தேவ ராய சுவாமிகள் இயற்றிய கந்தர் சஷ்டி கவசம், 237 “சரணஞ் சரணஞ் சரவண பவ ஓம்” என்றும்,

அருண கிரி நாதர், திருப் புகழ்.

53 “அரகர சிவன் அரி அயன் இவர் பரவி முன் அறுமுக சரவண பவனே என்று” எனவும்,

"சரவண பவா ஒன்று" (பழநி மலை 700 கவி) எனவும்,

பூவை கலியாண சுந்தர முதலியார் இயற்றியது. கடம்பன் கவசம், "சரவண பவ" எனவும் கூறு வதை உணர்க.

---

## 5. விநாயக அஷ்ட அக்ஷரம்.

ओम् गणपतये नमः

ஓம் கணபதயே நம:

கணபதி உபநிஷத்.

अ - उ - म् - गणपति - य - नमः

அ - உ - ம் - கணபதி - ய - நம:

ஓம் கணபதிக்கு வணக்கம் என்பது பொருளாம்.

இதனை கணேச அஷ்டாக்ஷரம் எனக் கூறுவர்.

---

# 6. ராம நாம மந்திரம்.

**हरे राम हरे राम राम राम हरे हरे ।**
**हरे कृष्ण हरे कृष्ण कृष्ण कृष्ण हरे हरे ॥ २ ॥**

கலி சந்தாரண உபநிஷத் 2 வது மந்திரம்.

**हरे राम हरे राम हरे राम हरे राम**

ஹரே ராம ஹரே ராம ஹரே ராம ஹரே ராம

ஹே ராம, ஹே ராம, ஹே ராம, ஹே ராம,

என்பது பொருள் ஆம்.

இது பதினாறு உயிர் எழுத் துடைய தாரக ராம மந்திரம் ஆம்.

ஹரே என்பது விளிச் சொல் லாம். அழைத் தல் பொருள் ஆம். ராம சப்தம் "ரம கிரீடா யாம்" என்னும் தாதுவி லிருந்து, அதாவது, பொருளில் இருந்து செய்யப்படுவ தாகும்.

தென் கலை - வட கலை வைஷ்ணவர்கட்கு இது அதி ரகசிய மந்திரம் ஆகும்.

ஆநந்த போதேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் ராம நாம, கிருஷ்ண நாம ஜபத்தைப் பற்றி, "நாம கௌமுதி" என்று ஒரு நூல் விரிவாக எழுதியிருக்கின்றார்கள்.

---

## 7. கிருஷ்ண நாம மந்திரம்.

हरे कृष्ण हरे कृष्ण हरे कृष्ण हरे कृष्ण

ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண,

ஹே கிருஷ்ண, ஹே கிருஷ்ண, ஹே கிருஷ்ண, ஹே கிருஷ்ண,

என்பது அதன் பொருளாம்.

இது பதினாறு உயிர் எழுத்துக்களை உடையதாரக கிருஷ்ண மந்திரம் ஆம்.

ஹரே என்பது விளிச் சொல்லாம். அழைத்தல் பொருள் ஆம்.

தென் கலை - வட கலை - வைஷ்ணவர் கட்கு இது அதி ரகசிய மந்திரம் ஆகும்.

---

## 8. அஹம் பிரஹ்மாஸ்மி மந்திரம்.

### (வேதாந்த ஷடு அக்ஷர மந்திரம்.)

अहम् - ब्रह्म - अस्मि

நான் பிரஹ்மம் ஆக இருக்கிறேன்.

இது வேதாந்த மகா வாக்கிய மந்திரம்.

59. स्वात्ममन्त्रं सदा पश्येत् ।
स्वात्ममन्त्रं सदाभ्यसेत् ॥ ५९ ॥

தேஜோ பிந்து உபநிஷத் 3 வது அத்தியாயம்.

स्व - आत्म - मन्त्रं - सदा - पश्येत् - स्व -आत्म - मन्त्रं - सदा - अभ्यसेत्.

தனது ஆத்ம மந்திரத்தினை எப்பொழுதும் பார்க்குக. தனது ஆத்ம மந்திரத்தினை எப்பொழுதும் அப்பியாசம் செய்க.

60. अहम् ब्रह्मास्मि मन्त्रोऽयं
दृश्यपापं विनाशयेत् ।
अहम् ब्रह्मास्मि मन्त्रोऽयं
अन्यमन्त्रं विनाशयेत् ॥ ६० ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், கிரிசிய பாபத்தினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், வேறு மந்திரங்களை நாசம் செய்யும்.

61. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
देहदोष विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
जन्मपापं विनाशयेत् ॥ ६१ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், கால உடல் தோஷத்தினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், ஜந்ம பாபத்தினை விநாசம் செய்யும்.

62. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
मृत्युपाशं विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
द्वैतदुःखं विनाशयेत् ॥ ६२ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், எம பாசத்தினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், த்வைத துக்கத்தினை விநாசம் செய்யும்.

63. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
भेदबुद्धिं विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
चिन्तादुःखं विनाशयेत् ॥ ६३ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், பேத புத்தியினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், சித்தத்தில் உள்ள துக்கத்தினை நாசம் செய்யும்.

64. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
बुद्धिव्याधिं विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
चित्तबन्धं विनाशयेत् ॥ ६४ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், புத்தியில் உள்ள வியாதியினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், சித்தத்தில் உள்ள பந்தத்தினை விநாசம் செய்யும்.

65. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
सर्वव्याधीन्विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
सर्वशोक विनाशयेत् ॥ ६५ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், எல்லா வியாதிகளையும் விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், எல்லாச் சோகத்தினையும் விநாசம் செய்யும்.

66. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
कामादीन्नाशयेत्क्षणात् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
क्रोधशक्ति विनाशयेत् ॥ ६६ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், காமம் முதலியவைகளை க்ஷணத்தில் விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், குரோத சக்தியை விநாசம் செய்யும்.

67. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
चित्तवृत्तिं विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
सङ्कल्पादीन्विनाशयेत् ॥ ६७ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், சித்த விருத்தியினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், சங்கல்பம் முதலியவைகளை விநாசம் செய்யும்.

68. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
कोटिदोषं विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
सर्वतन्त्रं विनाशयेत् ॥ ६८ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், கோடி தோஷத்தினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், சர்வ தந்திரங்களையும் விநாசம் செய்யும்.

69. अहं ब्रह्मास्मि मन्त्रोऽय
मात्माज्ञानं विनाशयेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽय
मात्मलोक जयप्रदः ॥ ६९ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், ஆத்ம அஞ்ஞானத்தினை விநாசம் செய்யும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், ஆத்ம லோகத்தினை ஜயம் பண்ணித் தருகின்றது.

70. अहं ब्रह्मास्मि मन्त्रोऽय
मप्रतर्क्यसुखप्रदः ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽय
मजडत्वं प्रयच्छति ॥ ७० ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், ஆக்ஷேபிக்க முடியாத சுகத்தினைக் கொடுக்கின்றது. நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், அஜடத் தன்மையினைக் கொடுக்கின்றது.

71. अहं ब्रह्मास्मि मन्त्रोऽय
मनात्मासुरमर्दनः ।
अहं ब्रह्मास्मि वज्रोऽय
मनात्माख्यगिरीन्हरेत् ॥ ७१ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம, அநாத்ம ரூப அசுரர்களை அழிப்பதாம். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், அநாத்மா என்னும் பெயரினை உடைய மலைகளைத் தள்ளி விடுவதாம்.

72. अहं ब्रह्मास्मि चक्रोऽय
मनात्माख्यासुरान्हरेत् ।
अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
सर्वान्स्तान्मोक्षयिष्यति ॥ ७२ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இச் சக்கிரம், அநாத்மா எனப் பெயருடைய அசுரர்களை அறுத்துவிடும். நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், அவ்வெல்லாரையும் விடுவிக்கின்றது.

73. अहं ब्रह्मास्मि मन्त्रोऽयं
ज्ञानानन्दं प्रयच्छति ।
सप्तकोटि महामन्त्रं
जन्मकोटि शतप्रदम् ॥ ७३ ॥

நான் பிரஹ்மம் ஆய் இருக்கிறேன் (என்னும்) இம் மந்திரம், ஞாந ஆநந்தத்தினைக் கொடுக்கின்றது. எழு கோடி மகா மந்திரம், ஆறு கோடி ஜந்மத்தினைக் கொடுப்ப தாகும்.

## (சப்த கோடி.)

எழு கோடி என்பது. சப்த - எழு - கோடி - மூலை - பிரிவு, தனுஷ் கோடி - ஆறு கோடி மாயா சக்தி என்பன போன்றன ஆம்.

எழு - 1. நம: 2. ஹூம்படு 3. ஸ்வதா 4. ஸ்வஸ்திக் 5. ஸ்வாஹா 6. வஷட் 7. வௌஷட் என்பவற்றை ஈற்றில் உடையன ஆம்.

மந்திரங்கள் யாவும் எழு பிரிவுக்குள் அடக்கமாம். அதனால், சப்த கோடி மகா மந்திரம் என்று கூறுகிறார்கள்.

மாயா சக்திகள் யாவும் ஆறு பிரிவுக்குள் அடக்கம் ஆம். அதனால், ஆறு கோடி மாயா சக்தி என்று கூறுகிறார்கள்.

தநுஷ்-வில், கோடி - நுனி ஆகும். முப் பத்து முக் கோடி - என்பது - முப் பத்து மூன்று பிரிவு என்பது பொருளாம்.

74. सर्वमन्त्रान्समुत्सृज्य
एतं मन्त्रं समभ्यसेत् ।
सद्यो मोक्षमवाप्नोति
नास्ति संदेहमण्वपि ॥ ७४ ॥

எல்லா மந்திரங்களையும் நன்கு விட்டு விட்டு, இம் மந்திரத்தினை நன்ருக அப்யாசம் செய்க. உடனே மோக்ஷம் கிட்டும். அணு அளவும் சந்தேஹம் இல்லை.

இவ் வாறு பதி ஞறு மந்திரங்களில் "நான் பிரஹ்மம்" என்னும் மந்திர ஜப பலன் கூறப்படுகிறது.

அயம் ஆத்மா பிரஹ்மம் என்பது ஆறு அக்ஷர மந்திரம். பிரஞ்ஞாநம் பிரஹ்மம் என்பது ஆறு அக்ஷர மந்திரம். தத் த்வம் அஸி என்பது நான்கு அக்ஷர மந்திரம். அஹம் பிரஹ்ம அஸ்மி என்பது ஆறு அக்ஷர மந்திரம்.

இவ் வாறு நான்கு வேதத்திற்கும் நான்கு மகா வாக்கிய மந்திரங்கள் இருக்கின்றன. "அஹம் பிரஹ்ம அஸ்மி" என்பது சிந்தனை ரூப ஜப வாக்கிய மந்திரம் ஆம்

# பலத் தொகுப்பு.



1. திருசிய பாப நிவிர்த்தி.
2. அந்ய மந்திரங்களைக் கெடுத்தல்.
3. தேக தோஷ நிவிர்த்தி.
4. ஜந்ம பாப நிவிர்த்தி.
5. எம பாச நிவிர்த்தி.
6. த்வைத துக்க நிவிர்த்தி.
7. பேத புத்தி நிவிர்த்தி.
8. சிந்தா துக்க நிவிர்த்தி.
9. புத்தி வியாதி நிவிர்த்தி.
10. சித்த பந்த நிவிர்த்தி.
11. சர்வ வியாதி நிவிர்த்தி.
12. சர்வ சோக நிவிர்த்தி.
13. காமாதி நிவிர்த்தி.
14. குரோத சக்தி நிவிர்த்தி.
15. சித்த விருத்தி நிவிர்த்தி.
16. சங்கல்பாதி நிவிர்த்தி.
17. கோடி தோஷ நிவிர்த்தி.
18. சர்வ தந்திர நிவிர்த்தி.
19. ஆத்ம அஞ்ஞான நிவிர்த்தி.
20. ஆத்ம லோக ஜயத்தினை கொடுப்பது.
21. ஆசங்கை அற்ற ஆநந்தத்தினை கொடுப்பது.

22. அசடத் தன்மையைக் கொடுப்பது.
23. அநாத்ம அசுரரை அழிப்பது.
24. வஜ்ரம், அநாத்ம மலையை பிளப்பது.
25. சக்கிரம், அநாத்ம அசுரரை அறுப்பது.
26. அவ் வெல்லாரையும் மோக்ஷம் அடை
27. ஞான ஆநந்தத்தினை கொடுப்பது. [விப்பது.
28. எழு கோடி மகா மந்திரங்களும் நூறு கோடி ஜந்மத்தினைக் கொடுப்பது.
29. எல்லா மந்திரங்களையும் விட்டு விட்டு, இம் மந்திரத்தினை அப்யாசம் செய்தல்.
30. உடனே மோக்ஷம் கிடைக்கும்.
31. அணு அளவும் சந்தேகம் இல்லை.

என 31 வித பலன் கூறப்பட்டிருக்கின்றது.

---

## முடிவு உரை.

இவ் வாறு மந்திரங்களுடைய தன்மையும், மந்திர விவேசநமும் செய்தோம். மந்திரங்கள் யாவும் 1. நம: 2. ஸ்வதி 3. ஸ்வாஹா 4. வஷட் 5. வௌஷட் 6. ஹும்படு 7. ஸ்வதா என்னும் எழு

வகை ஈற்றுச் சொற்களை உடையதாக இருப்பதால், சப்த கோடி, அதாவது, எழு பிரிவு என்பதனுள் அடங்கிவிடும். மொழி உணர்ச்சி குறைந்த தமிழர்கள், சம்ஸ்கிருத மொழி தமக்கு உரியது என்று கருதாது, பிறர்க் குரியது என்று கருதி இடர்ப்படுகின்றனர். எல்லா மனிதர்கட்கும் உரிய பாஷை சம்ஸ்கிருதமாக நீளாக இருந்தமையினால் தான், கந்நடம் - தெலுங்கு - மலையாளம் - மகா ராஷ்டிரம் - தமிழ் - ஹிந்தி - குஜராத் - பங்காளி - மைதிலி - உடியா முதலிய பாஷைகளில் மந்திரங்களை உண்டு பண்ணாமல் மஹான்கள் யாவரும் வாளா இருந்தனர். இப்பொழுது ஒரு பாஷை மட்டும் கற்றவர்கள், அதனை உணராது, சம்ஸ்கிருத மொழி தமக்குச் சொந்த மன்று என்று கருதிக் கொண்டு, அதனைப் புறக்கணித்துத் தமிழில் புது மந்திரங்கள் செய்ய முயற்சிக்கின்றனர். சம்ஸ்கிருத மந்திர மொழிக் குள்ள ஆற்றல் தமிழ் மொழிக்கு உண்டா? சப்த கோடி மகா மந்திரங்கள் என்று வழங்கி வந்தார்களே அன்றி, எழு பிரிவு நினைப்பு என்று எவருமே தமிழில் வழங்கவில்லை. " தனக்கு மூக்குப் போனாலும் குற்றம்

இல்லை. ஆசிரிக்குச் சகுந்தலையுடையா யிருப்பது வே நலம்'' என்னும் கருத்துடையவர்களாக இருப்பின், அவர்கள், பலனடையா யின்மையையும், அந்தக் குறைவு உண்டானதையும் கண்டு இன்புறவேண்டும். அன்றியும் இன்பறுமைக்குக் காரணமும் கூறவேண்டும். வெகுளி காரணமாகச் செய்தால் அம்மந்திரத்தினைச் செபிப்போர் பலன் அடையாமல் போவர். எவரும் பலனை விரும்பித் தான் ஜப தபங்களில் முயற்சிக்கின்றனர். உண்மை உணரார் பலர் பல விதமாகக் கூறுவர். அவற்றை உண்மை என நம்பி மோசம் போகாதிருக்கவேண்டும். எல்லா மொழிக்கும் தலைவனாகிய இறைவன் இடையறாது எல்லாச் சீவர்களுடைய ஹிருதயத்துள் இருந்து இடையூற்றை நீக்கி என்றும் இன்புற்று வாழச் செய்வாராக.

என்றும் குரு பரன் துணை கழல் சரணம் வாழ்க.

திருப் பூவணம் - சத சாஸ்திர கர்த்தா,
ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்
இயற்றிய மந்திரோபதேசம்
முற்றுப் பெற்றது.

---

திருப்பூவண மடாதிபதி, [illegible]

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள் இயற்றியன.



1. விசார சாகரம் வசநம். ஹிந்தி மொழி பெயர்ப்பு ரூ. 2—4
2. வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா. வசநம். ,, 2—8
3. யுக்திப் பிரகாசம் நிச்சல தாசர் இயற்றியது ,, 1—8
4. கதா சரித் சாகரம். வசநம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு 2—4
5. ஹரி மீடே - ஹரி தத்வ முக்தாவலி. வசநம். ,, 0—12
6. நைஷ்கர்ம்ய சித்தி. வசநம். ,, 0—8
7. வியாச தாத்பரிய நிர்ணயம். வசநம். ,, 0—8
8. வேதாந்த சித்தாந்த முக்தாவலி. வசநம். ,, 0—8
   பகவற் கீதை 15வது
9. மூர்க்க சதகம் - பத உரை. 0—8
   அத்தியாயம், சம்ஸ்கிருதம் தமிழ் பத உரை.
10. வேதாந்த பரிபாஷை வசநம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு 0—7
11. ஸ்வராஜ்ய சித்தி. வசநம். ,, 0—4
12. மண்டல பிராஹ்மண உபநிஷத் - ராஜயோக பாஷ்யம் ,, 0—4

13. ஈசாவாஸ்ய உபநிஷத் - சங்கர பாஷ்யம். வசநம். ,, 0—4
14. வேதாந்த சஞ்ஞா. வசநம். ,, 0—2
15 சிட்டாசாரம் - பால போதிநி உரை. 0—8
16. நாகா ஜீவ வாதக் கட்டளை - சத்யார்த்தப் பிரகாசிகை உரை 2—0
17. கீதா சாரத் தாலாட்டு - லகு சந்திரிகை உரை. 2—0
18. கீதா சாரத் தாலாட்டு - குறிப் புரை. 0—4
19. மகா ராஜத் துறவு - மகப் பிரசாதிநி உரை. 2—0
20. வைராக்ய (பக்தி) சதகம் - பத உரை பொழிப் புரை. 1—8
21. வைராக்ய (பக்தி) சதகத் தோத்திர உரை. 0—3
22. வைராக்ய தீபம் - பத உரை - பொழிப் புரை. 0—8
23. மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி (கவி 162) அகவல் 0—8
24. ஸ்தோத்திர ரச மஞ்சரி (கவி 160) 0—4
25. வேதாந்த சாஸ்திர ரத்நாவலி. 9 சேர்ந்தது. (கவி 1135) 3—0
26. கீதாத் திரயம் (ஈசுவர கீதை. பகவற் கீதை. பிரஹ்ம கீதை கவி 1430) மூன்று சேர்ந்தது 3—0
27. விவேக சூடாமணி (கவி 671) அஞ்ஞ வதைப் பரணி (கவி 494) 1—0
28. வாசிட்டம் (கவி 2055) 2—4